[9th December 1961

ரூ. 50—1—65 ஆக இருந்தது இப்பொழுது 90—4—110—3—140 ஆக மாற்றப்பட்டிருக்கிறது. இதைப் பார்த்தால் கணிசமான உயர்வு கொடுக்கப்பட்டிருக்கிறது என்பது தெரியவரும்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Is there any proposal before the Government to provincialise the other categories in the panchayats?

THE HON. SRI C. SUBRAMANIAM : That will be taken up later on. With the experience gained we have to take a decision in this matter. As far as possible, it may not be desirable to provincialise every service in the panchayat union.

*Higher Elementary School (Tuticorin)*

*** 2219 Q.—SRI R. J. SUNDAR SINGH :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தூத்துக்குடி, இல்லத்தார் உயர்தர ஆரம்பப் பள்ளியின் நிர்வாகிகளால் 1958-ம் ஆண்டு நவம்பர் மாதம் 20-ந் தேதி, 1958-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 15-ந் தேதி ஆகிய தேதிகளில் வேலையிலிருந்து நீக்கப்பட்ட, அப்பள்ளியின் இரண்டு ஆசிரியைகளை மீண்டும் வேலைக்கெடுத்துக்கொள்ளவேண்டி உத்தரவுகள் ஏதேனும் பிறப்பிக்கப்பட்டனவா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

SRI R. J. SUNDAR SINGH : Sir, may I know whether these two lady teachers have been reinstated and, if not, what action has been taken against the management?

THE HON. SRI C. SUBRAMANIAM : The teachers are since reported to have joined duty in the school on 23rd October 1961 forenoon.

*Waste Lands Enquiry Committee (Report)*

*** 2220 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தரிசு நிலங்களை (waste lands) உபயோகப்படுத்துவதைக் குறித்து Sri B N. Uppal கமிட்டியுடன் மாநில சர்க்கார் விவாதித்தார்களா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) The waste-lands Enquiry Committee set up by the Government of India has had discussions with officers of the State Government.

( ) The Committee has not yet submitted its report and as such details of discussions of this Committee cannot be given at this stage

9th December 1961]

SRI S. M. ANNAMALAI : நம்முடைய மாநிலத்தில் மொத்த முள்ள தரிசு நிலம் எவ்வளவு? அந்தத் தரிசு நிலத்தை எப்படி உபயோகிப்பது என்பதைப் பற்றி சர்க்கார் தனித் திட்டம் தீட்டி யிருக்கிறார்களா? அப்படியானால் அதன் விளக்கம் கொடுக்க முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இருநூற்றைம்பது ஏக்கருக்கு மேற்பட்ட பிளாட் வேஸ்டாக இருந்தால், எந்தெந்த ஜில்லாவிலே எவ்வளவு இருக்கிறது; அதை விவசாயத்திற்குக் கொண்டுவர முடியுமா என்று பரிசீலனை செய்து, அவற்றிற்கு சீக்கிரத்தில் வசதி செய்யப்படும். இருநூற்றைம்பது ஏக்கருக்கு உள்பட்ட இடமாக இருந்தாலும், அது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. எந்தெந்தப் பிராந்தியத்தில் அந்த பிளாட் இருக்கிறது, அதை எப்படி விவசாயத்திற்குக் கொண்டுவருவது, அதை எப்படி ரிக்கிளெய்ம் பண்ணவேண்டும் என்பதை எல்லாம் பரிசீலனை செய்து நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. மொத்தத்திலே தமிழ் நாட்டிலே அதிகமாக இம்மாதிரி தரிசு நிலம் இருப்பதாகத் தெரியவில்லை.

SRI K. ANBAZHAGAN : இருக்கிற தரிசு நிலங்களை அந்தந்த வட்டாரத்திலுள்ள நிலமில்லாத ஆதித்திராவிட ஏழைமக்களைப் பயிரிடச் செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைத்தான் அரசாங்கம் செய்து வருகிறது.

SRI A. GOVINDASAMY : இப்பொழுது புறம்போக்கு நிலங்களை நிலமில்லாத ஏழை ஆதித்திராவிட மக்களும், பின்தங்கிய மக்களும் உழுது பயிர்செய்துகொண்டிருக்கிறார்கள். ஆனால் அவைகளை இப்பொழுது பஞ்சாயத்திடம் ஒப்படைக்கிற காரணத்தினாலே, அந்த நிலங்களை பஞ்சாயத்து எடுத்துக்கொள்ள முயற்சி செய்கிறது. அவர்களே அந்த நிலங்களை தொடர்ந்து பயிரிடுவதற்கு சர்க்கார் அனுமதிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : யார் பயிரிடுவதானாலும், நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுப்பதுதான் அரசாங்கத்தின் கொள்கை. ஆனால், கணக்கில்லாமல், ஏற்கெனவே 10 அல்லது 15 ஏக்கர் நிலமுள்ளவர்கள், தங்கள் இஷ்டம்போல், தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்திக்கொண்டு, வேறு நிலத்தை ஆக்கிரமித்துக்கொண்டால் அதை சர்க்கார் அனுமதிக்காது. இதற்கெல்லாம் பஞ்சாயத்து சட்டம் தடையாக இருக்காது.

SRI S. SADASIVAM : என்னுடைய பகுதியிலே புல் தரிசு நிலங்களையும் தரிசு நிலங்கள் இனத்திலே கொண்டுவந்து, அவைகளையும் இந்த சட்டத்தில் உட்படுத்துவதற்கான காரியங்கள் நடைபெறுகின்றன. இதைத் தடுப்பதற்கு அமைச்சர் அவர்கள் தக்க நடவடிக்கை எடுப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் தனியாக எழுதி அனுப்பினால் அதைப் பார்த்து நடவடிக்கை எடுக்க முடியும்.

[9th December 1961

**SRI T. SAMPATH :** இதுவரையிலும் எத்தனை ஏக்கரா தரிசு நிலங்கள் ரிக்கிளெய்ம் செய்யப்பட்டிருக்கின்றன ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அதைப்பற்றிய தகவல் இப்பொழுது என்னிடமில்லை.

**SRI P. G. MANICKAM :** விவசாயத்திற்கு லாயக்கான தரிசு நிலங்கள் எங்கெங்கு அதிகமாக இருக்கின்றனவோ, அவைகளை எல்லாம் கூட்டுறவுப் பண்ணைகள் திட்டத்தின் கீழ் அமலுக்குக் கொண்டுவருவதற்கு மேலே குறிப்பிட்ட கமிட்டி பரிசிலனை செய்ததா? அப்படியானால் அவ்வாறு ஏதாவது திட்டம் இருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** குறிப்பான திட்டம் எதுவுமில்லை. நிலம் பரப்பு எவ்வளவு இருக்கிறது, பயிரிடுவதற்கு லாயக்காக இருக்கிறதா, அந்த வட்டாரத்திலே பயிரிடக்கூடியவர்கள் கூட்டுறவு சங்கத்தில் சேருவதற்குத் தயாராக இருக்கிறார்களா என்பதைப் பார்த்துத்தான் நடவடிக்கை எடுததுக்கொள்ள முடியும்.

**SRI T. S. RAMASWAMI :** கன்னியாகுமரி ஜில்லாவைப் பொறுத்தவரையில் இப்படி நேரடியாக அவர்களுக்கு அஸைன் பண்ணிக் கொடுப்பதற்கு முடியாமல் இருக்கிறது. குத்தகைப் பாட்டம் எடுத்தால்தான் கொடுக்கமுடியும். ஆகவே போர்டு ஸ்டாண்டிங் ஆர்டரை அங்கு விஸ்தரிப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இது அரசாங்கத்தின் பரிசிலனையில் இருக்கிறது. அதைப்பற்றி கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் முன்னமேயே குறிப்பிட்டிருக்கிறார்கள்.

**SRI C. NATARAJAN :** என்னுடைய வட்டாரத்தில் சின்ன சேலம் பகுதியில் ஆயிரக்கணக்கான தரிசு நிலங்களை ஆட்டுப் பண்ணைக்காக ஒதுக்கி, அரசாங்கம் எதுவும் செய்யாமல் வைத்திருக்கிறார்கள். அதைப் பொது மக்களுக்கு வழங்குவதற்கு அரசாங்கம் முன்வருமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கனம் அங்கத்தினர் ஆடே வேண்டியதில்லை என்று சொன்னால், அந்தப் பண்ணையைக் கலைத்துவிட்டு மேலும் என்ன செய்யலாம் என்பதைப் பற்றிப் பார்க்கலாம்.

**SRI V. K. KOTHANDARAMAN :** காட்டு இலாகாவிற்கு என்று நிலம் ஒதுக்கப்பட்டு, வருஷா வருஷம் பணம் செலவழித்தும்கூட, மரமே வராத தரிசு பூமி ஏராளமாக இருக்கிறது. அதை விவசாயம் செய்வதற்கு ஒதுக்க முடியுமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** காட்டு இலாகாவைப் பொறுத்த வரையில் இப்பொழுது சமர்ப்பிக்கப்படவிருக்கும் வரவு செலவுத்திட்டத்தில் புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்

9th December 1961]

கின்றன. அதைப் பார்த்தால் காட்டு இலாகாவுக்கு அதிகமாக வருமானம் கிடைக்கிறது என்பது தெரியவரும். அதிலே ஒன்றும் பயன்படுத்த முடியாமல் இருக்கும் நிலமாய் இருந்தால் வேறு என்ன செய்ய முடியுமோ அதைச் செய்து வருகிறோம்.

DEPUTY SPEAKER : Questions are over.

[Note.—An asterisk (*)at the Commencement of a speech indicates revision by the member.]

### II.—POINT OF INFORMATION *re* QUESTIONS.

* SRI K. VINAYAKAM : Sir, I rise on a point of information

Sir, we are sitting for the last time before the General Elections I believe we would not sit again for another session till we get elected and come back again to the House or defeated. I would like to know how many questions have been admitted so far, whether all of them would be placed before the House for any interpellation and how many would lapse. Because I have sent a large number of questions, I am asking this. How many answers have been received from the several Departments, how many would be placed before the House and how many would lapse? May I know this information from the Chair, Sir.? 9-00 a.m.

DEPUTY SPEAKER : The information will be furnished on Monday, as it is not readily available with me now.

* SRI T. S. RAMASWAMI : Generally, 35 to 45 questions are answered during question-hour. Today only 18 questions were allowed. Is it due to dearth of questions from Members or delay in respect of replies from the departments of the Secretariat? Several Members have given notice of several questions. Generally, question hour is for one hour in every Assembly. To-day we have not sat even for one-hour for questions. What exactly is the reason for this?

DEPUTY SPEAKER : Some of the Hon. Ministers had gone on tour. At the same time we have not received replies from the departments of the Secretariat. It has been delayed. That is why many questions have not been included in the list of questions.

SRI T. S. RAMASWAMI : We have hardly eight or ten days more. I think there are still hundreds of questions pending with the departments. In fact, if I remember right, in the Rules Committee's sittings at Ootacamund it was decided that if within a month of sending notice to the department concerned, the reply was not received, it should be included in the list of questions for the day. I want to know whether that understanding arrived at is being kept up?

DEPUTY SPEAKER : The Speaker has got power to extend the time, if necessary. If the department wants time, the Speaker extends the time.